# ஏப் லிங்கனும்

## சேற்றில் சிக்கிக் கிடந்த பன்றியும்



# ஏப்லிங்கனும்

## சேற்றில் சிக்கிக் கிடந்த பன்றியும்

ஆங்கிலத்தில்: ஸ்டீபன் கிரென்ஸ்கி

படங்கள்: கெர்ஷோம் க்ரிஃபித்

தமிழில்: குமரேசன் முருகானந்தம்

ஏப்(b) - aeb



இளம் ஏப் லிங்கன் அவசரத்தில் இருந்தார். பெரும்பாலான நேரங்களில் அவரது நாட்கள் பண்ணை வேலைகள் அல்லது வழக்கமான வீட்டு வேலைகளால் நிறைந்திருக்கும். ஆனால் இன்று சிறப்பானது. ஏனெனில், இன்று, அவர் ஒரு நீண்ட உரையாற்ற நகருக்கு சென்று கொண்டிருந்தார்.





ஏப் உரையாற்றுவதை விரும்பினார். அவர் ஒட்டுமொத்தமாக ஒரு வருடத்திற்கும் குறைவான நாட்களே பள்ளிப் படிப்பைப் பெற்றிருந்தார், ஆனால் அவர் நிறைய கதைகளை அறிந்திருந்தார். “நான் தெரிந்து கொள்ள விரும்பும் விஷயங்கள் புத்தகங்களில் இருக்கின்றன." என்று அவர் கூறினார். "நான் படிக்காத ஒரு புத்தகத்தை எனக்குக் கொடுபவர் எனது சிறந்த நண்பர்.“ஏப், பெரிய சொற்களை, அவற்றைப் பயன்படுத்துவதற்கு முன்பே உச்சரிக்க கற்றுக்கொள்வதையும் விரும்பினார். அவர் குளிர்காலத்திற்காக பருப்புகளை சேமிக்கும் அணில் போல அவற்றை சேமித்து வைத்தார்.





ஏப் உடையணிந்து தனது அடர்த்தியான தலைமுடியை சரிசெய்து கொண்டு அவர் எழுந்து நின்ற போது ஆறு அடி நான்கு அங்குல முழு உயரத்தையும் காட்டுமளவுக்கு இருந்தது. ஏபை ஒரு கூட்டத்தில் தவறி விட முடியாது, எளிதாக அடையாளம் காண முடியும். “பத்து படைகள் உயரமுள்ள வேலியை கடந்த மிகவும் விகாரமான மனிதன்” என்று அவருடைய தந்தை அழைப்பார். ஏப் தன்னிடமிருந்த ஒரே புதிய சூட்டின் கை பகுதியை தட்டிவிட்டுக்கொண்டார். பெரும்பாலும் அவர் உள்நாட்டிலேயே நெய்யப்பட்ட சட்டையையும், கணுக்காலைக்கூட எட்டாத மான்தோல் கால்சராயையும் அணிவது வழக்கம்.

நூற்றுக்கணக்கான மர வேலி கட்டைகளைப் பிளந்து அதில் கிடைத்த பணத்தின் மூலம் ஏப் இந்த சூட்டை வாங்கியிருந்தார். நாட்டில் வேறு யாரும் ஏபைப் போல மரத்துண்டுகளை பிளக்க முடியாது. எப்படி கோடாலியை வீசுவது என்பதையும் எத்தருணத்தில் இறுதி வீச்சிற்காக தனது எடையை மாற்ற வேண்டும் என்பதையும் நான்கு அறிந்திருந்தார்.



ஏப் கைவசம் நிறைய கருவிகளைக் கொண்டிருந்தார். வைக்கோல் வெட்டுவது எப்படி என்றும், சுத்தியலையும் அரத்தையும் பயன்படுத்துவது எப்படி என்றும் அவருக்குத் தெரியும். எப்படி ஒரு மானின் தோலை உறிக்கவேண்டும், எப்படி ஒரு பன்றி கறியை உணவுக்காக வெட்ட வேண்டும் என்பதையும் அறிந்திருந்தார் அவர்.



ஆனால் அவர் நகருக்கு செல்லத் தொடங்கும்போது அது எதுவும் அவரது மனதில் இல்லை. அவர் அவருடைய சொற்பொழிவைப் பற்றி யோசித்துக் கொண்டிருந்தார்

ஏப் நீண்ட எட்டு வைத்து நடப்பது வேகமாகவே தூரத்தைக் கடக்க உதவியது. ஐந்து அல்லது பத்து மைல்கள் அவருக்கு ஒரு சிறு உலாவுதலைப் போன்றது மட்டுமே. அவர் இன்டியானாவில் வாசித்தபோது, பள்ளிக்கு ஒவ்வொரு திசையிலும் ஒன்பது மைல்கள் நடந்து சென்று வந்தார். ஒரு நாள், தனக்கு ஆர்வமுள்ள ஒரு பொருளில் ஒரு வழக்கறிஞரின் உரையைக் கேட்பதற்காக முப்பத்தி நாங்கு மைல்கள் நடந்தார். இன்று தனது பேச்சைக் கேட்க பார்வையாளர்கள் ஆர்வமாகவும் இருப்பார்கள் என்று ஏப் நம்பினார்.





ஏப் ஒரு குன்றின் மீது வந்தபோது ஒரு பன்றி சேற்றில் உருண்டு கொண்டிருந்ததைப் பார்த்தார். அந்த பன்றி உறுமிக்கொண்டும், அந்த இடத்தில் ஒரு புயல் உருவானதைப்போல மூச்சிறைத்துக் கொண்டும் இருந்தது. ஏப் முதலில் அந்த பன்றி விளையாடுகிறது என்று நினைத்தார். “நீ நல்லா ஜாலியா இருக்கே”, என்று நினைத்துக்கொண்டார். ஆனால், நெருங்கி வந்து கவனித்தபோது, அந்த பன்றி போராடிக்கொண்டிருப்பதை உணர்ந்தார். “நீ சிக்கிக்கொண்டிருப்பதாக நான் நினைக்கிறேன்.” அந்த பன்றி உறுமியபடி மேலும் நெளிந்தது.





அப்போது, அவருக்கு அந்த மிருகம் அவதிப்படுவதைப் பார்க்க விரும்பவில்லை. அவருக்கு எட்டு வயதாக இருந்தபோது, அவர் தனது அறைக்கு வெளியே ஒரு காட்டு வான்கோழியை சுட்டுக் கொன்றார். இறந்த பறவையைப் பார்த்ததும் அவரது வயிற்றில் ஒரு வேடிக்கையான உணர்வை ஏற்படுத்தியது. அதன் பிறகு அவர் வேட்டையாடுவதை நிறுத்திவிட்டார். அவர் வேறு யாரேனும் விலங்குகளை கொடுமை செய்தால், அது தெரிந்தே எறும்பை மிதித்தாலும் கூட வெளிப்படையாக பேசிவிடுவார்.







நிச்சயமாக, யாரும் பன்றியை மிதிக்க திட்டமிட்டிருக்கவில்லை. அதன் உயிரும் ஆபத்தில் இல்லை. அது தனியாக பயந்துபோயிருந்தது. “இளம் பன்றியே, நான் வருந்துகிறேன்!ஆனால், நான் உன்னை காப்பாற்ற வார முடியாது. நான் எனது புதிய சூட்டை அணிந்துள்ளேன், இன்னும் ஒரு மணி நேரத்திற்குள் நான் என்னுடைய உரையை நிகழ்த்த வேண்டும்.” என்றார் ஏப்.



ஏப் அந்த சேற்று குழியை சுற்றி கடந்தார். அவர் அந்த பன்றியைப்பற்றிய சிந்தனையை மனதிலிருந்து அகற்றிட முயற்சி செய்தார். அவருடைய உரை முக்கியமானதாக இருந்தது. அவருடைய உரையை கேட்க வரவிருக்கும் மனிதர்களைப் பற்றி சிந்திக்கலானார். “அந்த உறையிலேயே கவனம் செலுத்து,” என்று தனக்குத்தானே சொல்லிக்கொண்டார். ஆனால், அதனால் ஒரு பிரையோசனமும் இல்லை. அவருடைய சிந்தை மீண்டும் மீண்டும் அந்த பன்றிக்கே திரும்பியது.



கடைசியாக, ஏப் நடப்பதை நிறுத்தினார். ஒரு பன்றி மனிதனாக இல்லாமலிருக்கலாம், ஆனால் அது உதவி பெறத் தகுதியானதே. ஏப் பெருமூச்சு விட்டபடி அந்த சேற்றுக்குழிக்குதித் திரும்பினார்.





"அமைதி," என்றார் ஏப். "உன்னை இரண்டு இழுப்பில் எடுத்துவிடலாம்." ஏப் ஒரு மல்யுத்த வீரர். கிராமத்தார், அவர்களுக்கு தெரிந்த வரையில் அவர் தான் சிறந்த மல்யுத்த வீரர் என்று கருதினார்கள். ஆனால், அந்த பன்றி அதை அறிந்திருக்கவில்லை. மேலும், ஏப் தனக்கு உதவிடவே வந்திருக்கிறார் என்று அது உணரவில்லை. அதனால், அது கடுமையாக போராடியது.



ஒரு வழியாக, ஏப் அந்த பன்றியை விடுவித்தபோது இருவருக்கும் இடையே சொல்லும்படியாக பெரிய வித்தியாசம் இல்லை.



ஏப் தனது சகதியான சூட்டை பார்த்தார். தலையை ஆடினார். ஆனால், மறுபடியும் வீட்டுக்கு போய் உடையை மாற்றிக்கொள்ள நேரமில்லை. அதுவுமில்லாமல், உடுத்திக்கொள்ள அவரிடம் வேறு நல்ல உடுப்புகளும் இல்லை.



அவர் நகரை அடைந்தபோது, கூட்டம் சேர்ந்திருப்பதைக் கண்டார். கடந்த காலத்தில், அவர் மரக்கட்டையின் மீதும் வெலியின் மீதும் நின்றபடி விவசாயிகளிடம் உரையாற்றியுள்ளார். ஆனால் இது நண்பர்களுக்கிடையேயான அரட்டை அடிப்பதைவிட மேலானது.

எதிர்காலத்திற்கான அவர்களின் கனவுகளைப் பற்றி அவர் பேசுவதைக் கேட்க எப்பின் பார்வையாளர்கள் வந்திருந்தனர். தங்களுக்குத் தாங்களே சொல்ல முடியாத உணர்வுகளையும் யோசனைகளையும் அவர் வார்த்தைகளில் கொண்டுவருவார் என்று அவர்கள் நம்பினர்.



ஏப்பின் பேச்சு நதியைப் பற்றியது மற்றும்அது அவர்களின் வாழ்க்கைக்கு எவ்வளவு முக்கியமானது. இந்த நதி நிச்சயமாக தண்ணீரை வழங்கியது, மேலும் சோளம் அரைக்கும் ஆலை மற்றும் மரமறுக்கும் ஆலைகளை இயக்குவதற்கான சக்தியையும் வழங்கியது.

ஆனால் நதிகளும் சரக்குகளை எடுத்துச்செல்வதற்கான சிறந்த வழியாகும். நாடு வேகமாக வளர்ந்து வருகிறது என்பதையும், அவர்கள் ஆற்றில் பயணம் செய்வதை ஆபத்தற்றதாகவும் பாதுகாப்பானதாகவும் செய்ய வேண்டிய தேவை இருந்தது மற்றும் அது நீண்ட காலத்திற்கு அனைவருக்கும் உதவும் என்பதையும் ஏப் விளக்கினார்.



ஏப் பேசும்போது, அவர் கூச்சலிடவில்லை அல்லது மக்களை பதட்டப்படுத்தவில்லை. அவர் தெளிவாக பேசினார், தனது மெய்மைகளை ஒவ்வொன்றாக பட்டியலிட்டார் மேலும் ஒரு கருத்தை உருவாக்கஅவற்றை ஒன்றாக இணைத்தார்.

அவர் கைகள் அவர் சொற்களின் வேகத்தைப் பின்தொடர்ந்து, அவர் பேசும்போது அவரது சூட்டின் பாக்கெட்டினுள்ளேயும் வெளியேயும் சென்றுவந்தன. ஏப், யாரும் அவருக்கு புரியாதவகையில் பேசுவதை வெறுத்தார். அதனால், தானும் அவ்வாறு போலிப் புனைவோடு பேசுவதில்லை என்று உறுதியாக இருந்தார்.



அவரது சூட்டில் மண் இன்னும் ஓட்டிக்கொண்டு இருந்தது, ஆனால் யாரும் அதைக் குறிப்பிட வாய்ப்பில்லை என்றே தோன்றுகிறது. ஏப் பாற்பதற்கு எப்படி இருந்தார் என்பதை விட அவர் சொன்னதைப் பற்றி மக்கள் அதிகம் அக்கறை காட்டினர்.

அவர் பேசும்போது மக்கள் ஒப்புக்கொள்ளும் விதமாக தலையாட்டினார்கள், அவர் பேசி முடிந்ததும் கைதட்டினர். அவரது உரை வெற்றிகரமாக இருந்தது. ஏன், அந்த பன்றி கூட அதை விரும்பியது போலும்.



இந்த புத்தகம் ஆபிரகாம் லிங்கன் பற்றி வழிவழியாக வந்த கதைகளின் மீதானது. கீழே உள்ள காலவரிசை அவருடைய வாழ்க்கையின் முக்கியமான நிகழ்வுகளை கோடிட்டுக்காட்டுகிறது.

| | |
|---|---|
| 1809 | கென்டகி அருகே ஹொட்ஜென்வில், பிறந்தார் |
| 1816 | இன்டியானாவுக்கு குடியேறுகிறார் |
| 1817 | தாயார் இறந்துவிடுகிறார் தந்தை, சாரா புஷ் ஜான்சனை மறுமணம் செய்துக்கொள்கிறார் |
| 1818 | குடும்பம் இல்லினாய்ஸுக்கு குடிபெயர்கிறது |
| 1834 | மாநில சட்டமன்றத்திற்கு தேர்ந்தெடுக்கப்பட்டார் |
| 1837 | மாநில தலைநகர் ஸ்ப்ரிங்ஃபீல்ட்டிற்கு குடியேறுகிறார் |
| 1842 | மேரி டோட்டை திருமணம் செய்துக்கொள்கிறார் பின்னர் நான்கு குழந்தைகள் பிறக்கின்றனர் |
| 1846 | அமெரிக்க காங்கிரசுக்கு தேர்ந்தெடுக்கப்பட்டார் |

| | |
|---|---|
| 1858 | அமெரிக்க செனட்டிற்காக போட்டியிடுகிறார், ஆனால் ஸ்டீபன் ஏ. டக்ளஸிடம் தோல்வியடைகிறார் |
| 1860 | அமெரிக்காவின் ஜனாதிபதியாக தேர்ந்தெடுக்கப்பட்டார் |
| 1861 | உள்நாட்டு யுத்தம் ஏப்ரல் மாதம் தொடங்குகிறது |
| 1863 | அடிமைகளை விடுவித்து, விடுதலை பிரகடனம் வெளியிடுகிறார் கெட்டிஸ்பேர்க் உரையை நிகழ்த்தி, நாடு ஒற்றுமையாக இருக்க வேண்டும் என்று அழைப்பு விடுக்கிறார் |
| 1864 | இரண்டாவது முறையாக மீண்டும் தேர்ந்தெடுக்கப்பட்டார் |
| 1865 | உள்நாட்டு போர் ஏப்ரல் 9 ம் தேதி முடிவடைகிறது லிங்கன் ஐந்து நாட்களுக்கு பின்னர், ஏப்ரல் 14 அன்று ஃபோர்டு தியேட்டரில் படுகொலை செய்யப்பட்டார் |